Phone: No. 2241 Regd. No. M. 5934

# ஜனசக்தி

தின இதழ். ஆசிரியர். ப. ஜீவானந்தம்

மலர் 14] பக்கம் 4 :: விலை அணா 1 [இதழ் 277

சென்னை 26-5-58 விளம்பி, வைகாசி-13 திங்கள் (வெளியூர் 27-5-58 விளம்பி, வைகாசி-14 செவ்வாய்)

### இந்திய ஹாக்கி கோஷ்டி வெற்றி வாகை

டோக்யோ, மே 25—

நேற்று இங்கு துவங்கிய ஆசிய விளையாட்டுக்களில், இந்திய ஹாக்கி விளையாட்டு கோஷ்டி எட்டு 'கோல்' அடித்து வெற்றி வாகை சூடியது. எதிர் தரப்பில் ஆடிய ஜப்பானிய கோஷ்டி ஒரு 'கோல்'கூட போட முடியவில்லை.

### பின்லந்துக்கு உதவத் தயார்

மாஸ்கோ, மே 24—

பின்லந்துக்குத் தொழில்வளர்ச்சிக்கான தளவாடங்களை உதவி அங்குள்ள வேலையில்லாத் திண்டாட்டத்தைச் சமாளிக்க உதவி செய்வதாக பின்லந்து ஜனாதிபதி கெக்கோனனிடம் சோவியத் பிரதமர் குருஷ்சேவ் கூறினார்.

# பகிரங்க விசாரணை நடத்தத் தயாரா?

## டாட்டாவிடம் மட்டும் பாசம் ஏன்?

### தொழிலாளர் நலனைப் பாதுகாருங்கள்

### சர்க்காருக்கு டாங்கே அறைகூவல்

பாட்னா, மே 25—

ஜாம்ஷெட்பூர் டாடா இரும்பு, உருக்குத் தொழிற்சாலையில் தொழிலாளர்களது நலன்களைப் பாதுகாக்கும்படி மத்திய சர்க்காரையும், பீகார் சர்க்காரையும் அகில இந்திய தொழிற்சங்க காங்கிரஸ் பொதுச்செயலாளர் தோழர் எஸ். ஏ. டாங்கே எம்.பி., இன்று கேட்டுக் கொண்டுள்ளார். அவர் தமது வேண்டுகோளில் மேலும் தெரிவித்திருப்பதாவது:

இதுவரை சர்க்கார் முதலாளிகள் பக்கமே தலையிட்டுள்ளது. இம் மாதிரி பாரபட்சம் காட்ட வேண்டாமென்றும், முதலாளிகளின் நலன்களுக்குப் பாதகமில்லாத வகையில் தொழிலாளர்களது நலஉரிமைகளைக்காக்கும்படி கேட்டுக் கொள்கிறேன்.

**வேலை நிறுத்தங்களை தூண்டிவிடுவது நோக்கமல்ல**

பத்திரிகை நிருபர்கள் கூட்டத்தில் அவர் மேலும் பேசுகையில் தெரிவித்ததாவது:

வேலை நிறுத்தங்களைத் தூண்டிவிடுவது கம்யூனிஸ்ட் கட்சியின் நோக்கமல்ல. இந்த ஜாம்ஷெட்பூர் வேலை நிறுத்தம் கூட கடந்த 6 மாதங்களில் மூன்றுதடவை ஒத்திவைக்கப்பட்டுள்ளது. பர்ன்பூரிலும், குல்தியிலும் சமீபத்தில் கம்யூனிஸ்ட் தலைமையிலுள்ள தொழிற்சங்கங்கள் வேலைநிறுத்த நோட்டீஸ்களை வாபஸ்பெற்றுவிட்டன.

**அவதூறுகள்**

மஜ்தூர் யூனியனின் அங்கீகாரத்திற்கு வாக்கெடுப்பு நடத்தும்படி அந்த யூனியன் ஒருபோதும் கோரியதில்லை என்று டாடா நிர்வாகம் கூறுவது உண்மையல்ல. யதார்த்தத்தில் 1957 அக்டோபர் 27-ம் தேதி இத்தகையதோர் கோரிக்கை நிர்வாகத்திடம் எழுத்து மூலமாகக் கொடுக்கப்பட்டது. இதே கோரிக்கை நிர்வாகத்திடம் மூன்று முறை வற்புறுத்தப்பட்டது.

**நேருவிடம் தூது**

மஜ்தூர் யூனியனின் பிரதிநிதித்துவக் கோரிக்கையை உசிதமான முறையில் தீர்க்கும்படி பிரதமர் நேருவிடம் தூது சென்று எழுத்து மூலமாக ஒரு வேண்டுகோளைச் சமர்ப்பித்தேன். அதை அவர் பீகார் சர்க்காருக்கும், டாடா நிர்வாகத்திற்கும் அனுப்பி வைத்தார். இவ்விதமெல்லாமிருக்க மஜ்தூர் யூனியன் அங்கீகாரத்துக்கு வாக்கெடுப்பு நடத்தும்படி கோரவே இல்லை என்று டாடா நிர்வாகம் கூறுவது ஆச்சரியமாக இருக்கிறது.

**மற்றொரு அவதூறு**

ஐ. என். டி. யு. சி. சங்கத்திற்கும் டாடா நிர்வாகத்திற்குமிடையே ஏற்பட்ட ஒப்பந்தத்திலேயே மஜ்தூர் யூனியன் கோரிக்கைகள் நிறைவேற்றப்பட்டிருப்பதாக நிர்வாகம் கூறுவது சரியல்ல, மஜ்தூர் யூனியனின் முக்கிய கோரிக்கைகள்பஞ்சப்படி, சம்பளம் பற்றியது. மேலே கூறிய ஒப்பந்தத்தில் இவை பற்றிய பேச்சே இல்லை.

**ராணுவம் இதற்கா?**

நாட்டின் தற்காப்பிற்காக இருக்கும் ராணுவம் தொழிலாளர்களின் வேலை நிறுத்தத்தை ஒடுக்க வரவழைக்கப்பட்டிருப்பது மிகவும் வருந்தத்தக்கது. இது ராணுவத்தின் பெருமைக்கும் தொழிலாளர்களின் பெருமைக்குமே இழுக்கு விளைவிப்பதாகும். ஜாம்ஷெட்பூர் சம்பவங்களின்போது கல்லெறியப்பட்டதாக விவாதத்திற்கு வைத்துக்கொண்டால்கூட, அதை நிறுத்த ராணுவத்தை அழைக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டுவிட்டதா? இந்த விஷயத்தை வருகிற பார்லிமெண்ட் கூட்டத்தில் நான் எழுப்பப்போகிறேன்.

**விசாரணை நடத்திப் பார்க்கட்டும்**

டாடா நிர்வாகத்தைச் சேர்ந்த 800 பேர்களுக்கு பயமுறுத்தல் கடிதங்கள் வந்திருப்பதாகக் கூறப்படுவதுபற்றி கேட்ட கேள்விக்கு டாங்கே பதிலளித்தாவது:

இது சுத்தப் பைத்தியக்காரத்தனம். நிச்சயமாக இது தொழிலாளர்கள் செய்ததல்ல. யாரோ கருங்காலிகள் இதனைச் செய்துள்ளார்கள். வேண்டு

(3-ம் பக்கம் பார்க்க)

### டுனிசியாவில் அவசர கால நிலைமை

### ஜனாதிபதி பிரகடனம்

டுனிஸ், மே 25—

பிரெஞ்சுத் துருப்புகளுக்கும், வட ஆப்பிரிக்காவில் உள்ள முன்னாள் பிரெஞ்சுக் காலனியான (சமீபத்தில் விடுதலையான) டுனிசியா துருப்புகளுக்கும் ஏற்பட்ட கைகலப்பைத் தொடர்ந்து, ராஜ்யம் பூராவிலும் அவசரகால நிலைமையை டுனிசிய ஜனாதிபதி போர்குபா பிரகடனப்படுத்தியுள்ளார்.

தெற்கு டுனிசியாவில் பிரெஞ்சு விமானங்கள் குண்டு வீசித் தாக்கியதாக டுனிசிய சர்க்காரின் அறிக்கை ஒன்று கூறுகிறது.

## சம்யுக்தமகாராஷ்டிரத்திற்குஆதரவு

### கம்யூனிஸ்டுகள் பற்றி மாமூல் அவதூறு

### பி. சோ. நிர்வாகக் குழு முடிவுகள்

பூனா, மே 25—

மகாராஷ்டிர மொழி பேசப்படும் பிரதேசங்கள் மொழிவாரி ராஜ்யமாக அங்கீகரிக்கப்பட வேண்டும். பம்பாய் நகரமுட்பட்ட சம்யுக்த மகாராஷ்டிர ராஜ்யம் நிறுவப்படவேண்டும் என்று இங்கு நடைபெற்ற பிரஜாசோஷலிஸ்ட் கட்சியின் தேசிய நிர்வாகக் குழு தீர்மானம் நிறைவேற்றியுள்ளது.

பொதுத்தேர்தல், பிறகு நடைபெற்ற இடைத் தேர்தல்கள், ஸ்தல ஸ்தாபனத் தேர்தல்கள் இவை அனைத்திலும் மகாராஷ்டிர மக்கள் இந்த மொழிவழி ராஜ்யக் கோட்பாட்டுக்கு அமோக ஆதரவு அளித்துள்ளனர். என்றும் இத்தீர்மானம் கூறுகிறது.

கம்யூனிஸ்ட் கட்சி பற்றிக் குறிப்பிடுகையில், அமிருதசரஸ் தீர்மானம் போர்த் தந்திரத்தில் மாறுதலேயன்றி வேறு எதுவுமில்லை என்றும், சர்வதேசக் கம்யூனிஸத்துடன் உறவு கொண்டாடும் வரையில் இது சர்வாதிகாரப் போக்குக்கே இடமளிக்கும் என்றும், 'ஜனநாயகப் புனித யுத்த வீரர்'களான பி சோ. வினர் கம்யூனிஸ்டுகள் சம்பந்தமாகத் தமது கொள்கையை மாற்றிக்கொள்ள முடியாது என்றும் மாமூலான அவதூறின் அடிப்படையில் ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டுள்ளது

நாட்டில் அரசியல் பொருளாதார சீர்கேடு முற்றி வருவதைத் தடுக்க நடவடிக்கை எடுக்கும்படி ஒரு தீர்மானம் குறிப்பிடுகிறது.

## குபேர் ஊழலை விசாரணை நடத்துக

### 20,000 பேர் கூட்டத்தில் கோரிக்கை

### பீடை ஒழிந்ததென பெரு மகிழ்ச்சி

சென்னை, மே 26—

"பிரஞ்சு ஏகாதிபத்தியத்தின் தொங்கு சதையாக இருந்து, பிரஞ்சிந்திய விடுதலைப் போராட்ட வீரர்களை சொல்லொணா கொடுமைகளுக்கு ஆளாக்கிய குபேர் கும்பல், அதிகாரப்பீடத்திலிருந்து குப்பைத்தொட்டியில் விழுந்துவிட்டது. பிரஞ்சு ஏகாதிபத்தியத்தின் மிச்ச சொச்ச பீடை ஒழிந்துவிட்டதென்ற மகிழ்ச்சிப் பெருக்கால் புதுவை மாநகர மக்கள் குதூகலமாயிருக்கிறார்கள்.

தேவிகுளம் வெற்றியைத் தொடர்ந்து, குபேர் வீழ்ச்சியடைந்ததானது பாண்டிச்சேரி ராஜ்ய மக்களின் மகிழ்ச்சியை இருமடங்கு ஆக்கிவிட்டது."

தேவிகுளம் வெற்றியைக் கொண்டாடுவதற்காக, பாண்டிச்சேரி ராஜ்ய கம்யூனிஸ்ட் கட்சியின் சார்பில் நேற்று முன்தினம் புதுவையில் நடைபெற்ற 20,000 பேர் திரண்ட பொதுக் கூட்டத்தில் கம்யூனிஸ்ட் தலைவரும் பாண்டிச்சேரி ராஜ்ய சட்டசபையில் எதிர்க்கட்சித் தலைவருமான தோழர் வி. சுப்பையா அவர்கள்

(3-ம் பக்கம் பார்க்க)

### கார்சிகாவில் பிரெஞ்சு ராணுவப் புரட்சி

பாரிஸ், மே 25—

மத்திய தரைக் கடலில் உள்ள பிரான்சு தேசத்திற்குச் சேர்ந்த கார்சிகா என்ற தீவிலும், அல்ஜீரியாவைத் தொடர்ந்து, பிரெஞ்சு ராணுவக் கலகக்காரர்கள் அரசாங்க அதிகாரத்தைக் கைப்பற்றியுள்ளனர்.

பிரெஞ்சு நாட்டுப் பிரதமர் ப்ளிம்லின் இதுபற்றி இன்றிரவு ரேடியோ மூலம் நாட்டு மக்களுக்கு விடுத்த செய்தியில், துரோகிகள் நம்மை உள்நாட்டுக் கலகப் பாதையில் இழுத்துச் செல்ல முயற்சிக்கிறார்கள்; பிரான்சிலும் இந்த உள்நாட்டுக் கலகம் ஏற்படும் ஆபத்து உள்ளது, என்று கூறினார்.

இந்தக் கலக நடவடிக்கையில் இறங்கிய எல்லோர் மீதும் நடவடிக்கை எடுத்துக் கொள்ளப்படும் என்றும் கூறினார்.

## பிரெஞ்சுக் குடியரசைக் காப்பாற்ற ஜனநாயகவாதிகள் ஒன்றுபடுக

### பிரெஞ்சு கம்யூனிஸ்ட் கட்சி வேண்டுகோள்

பாரிஸ், மே 25—

சோஷலிஸ்டுகளும், ஜனநாயகத்தில் பற்றுள்ள இதர எல்லா கட்சிகளும், குழுக்களும், அல்ஜீரியா கார்சிகா ராணுவக் கலகங்களுக்கெதிராக நடவடிக்கை எடுப்பதற்கு ஐக்யப்பட வேண்டும், என்று பிரெஞ்சுக் கம்யூனிஸ்ட் கட்சி இன்று ஒரு வேண்டுகோள் விட்டுள்ளது.

"நம் வாசலண்டை அபாயம் ஏற்பட்டிருக்கும்போது குடியரசு சக்திகளிடையே பிளவை நீடிக்க நாம் அனுமதிக்க முடியுமா?" என்று பிரெஞ்சுக் கம்யூனிஸ்ட் கட்சியின் அரசியல் குழு வெளியிட்டுள்ள மேற்படி வேண்டுகோளில் கேட்கப்பட்டுள்ளது.

ஒருமணி நேரத்தையும் கூட வீணாக்காமல் சுதந்திரத்தைப் பாதுகாப்பதற்கு அத்தியாவசியமாக என்ன நடவடிக்கை எடுத்துக்கொள்ளவேண்டுமென்று சிந்திக்கும்படி அந்த அறிக்கை கேட்டுக் கொள்கிறது.

தொழிலாளவர்க்கமும் சகல குடியரசுவாதிகளும் ஒன்றுபட்டு துரோகிகளுக்கெதிராக நடவடிக்கையிலிறங்க முன்வரும்படி அவ்வறிக்கை கேட்டுக்கொண்டது.

அல்ஜீரியாவின் ராணுவக் கலகத் தலைவர்களை உடனடியாக அவர்கள் ஆக்ரமித்துக் கொண்டுள்ள பதவிகளிலிருந்து வெளியேற்றி அவர்களைத் 'தண்டிக்க வேண்டும். அவர்களின் தலைவனை டிகாலேதான் இந்த உள்நாட்டுக் கலகத்தை ஏற்பாடு செய்பவராகவும் கருதவேண்டும் என்றும் அந்த அறிக்கை கூறுகிறது.

## சென்னை டாட்டா அலுவலகத்தின் முன் மாபெரும் ஆர்ப்பாட்டம்

### ஆயிரக்கணக்கான ஊழியர்கள் கலந்தனர்

சென்னை, மே 26—

சென்னை அரண்மனைக்காரத் தெருவிலுள்ள டாடா இரும்பு எஃகு அலுவலகத்திற்கு முன் ஈஸ்ட்ஏஷியாடிக் எண்ணெய்க்கம்பெனிகள் முதலியவற்றில் வேலை செய்யும் மத்தியதர வர்க்க ஊழியர்கள் நூற்றுக்கணக்கான பேர் மே23-ம் தேதி பெரும் ஆர்ப்பாட்டம் செய்தனர். 'ஏகபோக முதலாளி டாடா—காங்கிரஸ் கூட்டுச் சதிஒழிக','இராணுவத்தைவாபஸ் வாங்கு, ஊரடங்குச் சட்டத்தை வாபஸ் வாங்கு' 'மஸ்தூர் யூனியனை அங்கீகாரம் செய்' என்று அவர்கள் இடிமுழக்கம் போல கோஷித்தனர். இந்த ஆர்ப்பாட்டத்தைப் பார்க்கப் பெருந்திரளான மக்கள் கூடிவிட்டனர். காங்கிரஸ் சர்க்காரின் அக்கிரமத்தை அவர்கள் சபித்தனர். இந்த ஆர்ப்பாட்டத்தில் டாடா சிப்பந்திகளும் கலந்து கொண்டதுகுறிப்பிடத் தக்கது

பகல் 2 மணி முதல் 2-30 வரை டாடா அலுவலகத்தின் முன்பு பாங்கு ஊழியர்கள் ஆர்ப்பாட்டம் நடத்தினர்.

பின்னர் மாலை 5 மணி அளவில் ஹார்பர் யூனியனைச் சேர்ந்த ஆயிரம் தொழிலாளர்கள் ஆர்ப்பாட்டம் நடத்தினர். (ந. நி.)

# ஜனசக்தி

சென்னை 26-5-1958

## வேலியே பயிரை மேய்ந்தால்!

பட்டப்பகலிலே, பாரத மண்ணிலே ஜனநாயகம் படுகொலை செய்யப்படுகிறது. சட்டத்தின் காவலர்கள் ஜனநாயகத்தின் நெடுந்தூண்கள் என்று கூறப்படும் கவர்னர்கள், காங்கிரஸ் ஆட்சிகளைப் பாதுகாப்பதற்காக இந்தப் படுகொலையில் இறங்கியுள்ளனர்.

இந்திய ஜனநாயகம் உலகத்துக்கொரு புதுமை என்று ஜம்பமாகப் பேசி வரும் காங்கிரஸ் தலைமையின் தூண்டுதலுடன், மத்திய சர்க்காரிலுள்ள காங்கிரஸ் பெருந் தலைகளின் அனுமதியுடன் இந்தப் படுகொலை நடைபெற்றிருக்கிறது.

'வேலியே பயிரை மேய்ந்தால்' என்று ஒரு பழமொழி கூறுவதுண்டு. இந்திய அரசியல் சட்டத்தின் வேலிகளாகக் கருதப்படும் கவர்னர்கள் ஒரிஸா, புதுவை இரு ராஜ்யங்களில் நடந்து கொண்டிருக்கும் முறையைத் தான் படுகொலை என்று குறிப்பிடுகிறோம்.

இரு ராஜ்யங்களிலும் காங்கிரஸ் சர்க்காருக்கு ஆட்டங் கண்டு விட்டது. காங்கிரஸ் தலைமை ஜீவன் தானம் கொடுத்து ஆயுள் நீடிக்கச் செய்வதற்கு எடுத்த முயற்சிகள் பலிக்கவில்லை. இந்த சமயத்தில்தான் கட்சிப் பற்றற்று, நடு நிலைமையுடன் சட்டத்தின் காவலர்களாக நிற்க வேண்டிய கவர்னர்கள் அரங்கத்திற்கு வருகின்றனர். வந்து, பச்சைக் காங்கிரஸ்காரர்களாக, கட்சி பிடித்துக் கொண்டு நிற்கும் காங்கிரஸ்காரர்களாகச் செயல்படுகின்றனர். அரசியல் சட்டம், சம்பிரதாயங்கள் யாவும் காற்றிலே விடப்பட்டன.

முதலில் ஒரிஸாவை எடுத்துக் கொள்வோம். மெஹதாப் தலைமையில் இருந்த காங்கிரஸ் மந்திரி சபை சட்டசபையில் போதிய ஆதரவில்லாததால் ராஜினாமாச் செய்தது. மெஹதாப் காங்கிரஸ் சட்ட சபைத் தலைமைப் பதவியைக் கூட ராஜினாமாச் செய்து விட்டார். எதிர்க்கட்சித் தலைவர் தேவ் மாற்று சர்க்கார் நிறுவத் தயாராக இருப்பதாயும் 72 பேர் மாற்று சர்க்காரை ஆதரிக்கத் தயாராக இருப்பதாயும் கூறினார்.

கவர்னர் செய்ததென்ன? மெஹதாபின் ராஜினாமாவை ஏற்கவில்லை. ஏற்காமல் டெல்லிக்குப் போய் காங்கிரஸ்-மத்திய சர்க்கார் மேலிடங்களுடன் மந்திராலோசனைகள் நடத்தினார். எதிர்க்கட்சித் தலைவர் தேவை சந்தித்துப் பேசினாலும் அவருக்குப் பெரும்பான்மை ஆதரவு இல்லை என்று தாமே யதேச்சாதிகாரமாக முடிவு செய்து விட்டார். பி. சோ., கம்யூனிஸ்ட் கட்சிகளின் முடிவுகளை அவர் சட்டை செய்ததாகத் தெரியவில்லை.

இறுதியாக மெஹதாப் ராஜினாமா வாபஸ் பெற்று மீண்டும் மந்திரி சபையுடன் பதவிப் பிரவேசம் செய்கிறார். காங்கிரஸ் கட்சியைத் தவிர, இதர கட்சியினர் யாரும் பதவிக்கு வந்துவிடக்கூடாது என்பதே கவர்னருக்குப் பெரிய லட்சியமாக இருந்திருக்கிறது. எதிர்க்கட்சித் தலைவர் பொறுப்புள்ள கட்சிகளை நம்பி அவர்களுக்கு சட்டசபையில் ஆதரவு இருக்கிறதா என்பதைப் பரிசீலனை செய்யாமல் யதேச்சாதிகாரமாக முடிவு எடுத்தது கண்டிக்கத்தக்கது.

கம்யூனிஸ்ட் கட்சி, பி. சோ. கட்சி இவை இந்தப் போக்கை வன்மையாகக் கண்டித்துள்ளன.

புதுவைக்கு வருவோம். புதுவையில் குபேர் ஆட்சி கவிழ்ந்து விட்டது. காங்கிரஸிற்குள் குத்து வெட்டு. இதைச் சமாளித்து பதவிகளைப் பங்கு போட்டுக் கொண்டு எப்படியாவது மீண்டும் காங்கிரஸ் ஆட்சி நிலைநாட்டப் பெற வேண்டும் என்பதற்காக புதுவை நிர்வாகி பகீரதப் பிரயத்தனங்கள் செய்திருக்கிறார். தமது பதவிக்கும் பொறுப்புக்கும் எல்லை மீறி நடந்திருக்கிறார். எதிர்க்கட்சியின் கருத்துக்களைக் கேட்கக் கூட ஒருப்படாமல் சட்டசபையையே தான் தோன்றித்தனமாக ஒத்தி வைத்திருக்கிறார். இது வா ஜனநாயகம்! இந்த ஜனநாயகத்தைத் தான் உச்சிமேல் வைத்து மெச்சுகிறார் போலும் நேருஜி.

சட்டசபையில் பெரும்பான்மை ஆதரவுள்ளவர்கள் மந்திரி சபை நிறுவ அழைக்கும் பொறுப்பை விட்டு விட்டு வீழ்ச்சியடையும், மரண மூச்சு வாங்கும் மந்திரி சபைகளுக்கு அபயமளித்து ஆயுள் நீடிக்கப் பாடுபடும் அளவுக்கு 'கட்சியற்ற' கவர்னர்கள் துணிந்திருப்பது நமது ஜனநாயகக் கோட்பாடுகளைக் கேவலப்படுத்துவதாகும். காலமெல்லாம் இந்திய ஜனநாயகம் பற்றிப் புகழ்பாடுவோர் கண்திறந்து இந்தக் காட்சியைக் காண்பார்களா?

ஒரிஸா, புதுவை கவர்னர்களின் செயல்களைப் பற்றித் தக்க விசாரணை நடத்த வேண்டும். சட்டத்திற்கு மீறி, வரம்புக்கு மேல் கட்சி பஜனை செய்யும் போக்கு அனுமதிக்கப்படமாட்டாது என்று அவர்களுக்குக் கடுமையான தாக்கீது செய்யப்பட வேண்டும்.

# தேவிகுளம் தேர்தல் வெற்றியில்

## திருமூர்த்தி, அப்பு, கோவிந்தசாமி

### பாவலர் வரதராஜன் கலைப் பங்கு

சென்னை, மே 25—

தோட்டத் தொழிலாளர்களின் வாழ்க்கையைச் சித்தரிக்கும் கலை நிகழ்ச்சிகளை நடத்தி தேவிகுளம் மக்களை ஆகர்ஷித்து கம்யூனிஸ்ட் கட்சிக்கு வெற்றிதேடித் தந்ததில் தோழர்கள் வெ. நா. திருமூர்த்தி குழுவினருக்கும், கோவை தோழர் அப்பு குழுவினருக்கும், கோலார் தோழர் கோவிந்தசாமி குழுவினருக்கும் முக்கிய பங்கு உண்டு.

**திருமூர்த்தி-சுப்புரத்தினம்**

கவிஞர் திருமூர்த்தி புதுமைக் குறவனாகவும், தோழர் சுப்புரத்தினம் புதுமைக் குறத்தியாகவும் வேடம்பூண்டு ஒவ்வொரு தோட்டங்களிலும் தபேலா, ஆர்மோனியம் முதலிய தக்க பக்கவாத்தியங்களோடு, பாட்டுகள் பாடியும் ஆட்டங்கள் ஆடியும், காங்கிரஸ்வாதிகள் அவ்வப்போது பரப்பிவந்த அவதூறுகளையும் பொய்களையும் விகடமாகப் பேசி உடைத்தும், பத்தாண்டு காங்கிரஸ் ஆட்சியின் போலீஸ் அடக்குமுறையையும், வரிக் கொடுமைகளையும், ஒரு ஆண்டு கம்யூனிஸ்ட் ஆட்சியில் கிடைத்துள்ள நிம்மதியான வாழ்வு, கூலி உயர்வு, பிரசவ சகாய நிதி சலுகைகள், தரிசு நிலம், நிலச் சீர்திருத்தம், தமிழர்களுக்குச் செய்துவரும் விசேஷ சலுகைகள் வீட்டு வசதி, வேலை வாய்ப்புகள் ஆகியவை பற்றியும், ஓட்டுப் போடும் முறைகள் பற்றியும் கதிர் அரிவாளுக்கு ஓட்டளிக்க வேண்டுமென்பது பற்றியும் புதுப்புது மெட்டுகளில் புதுப்புது பாட்டுகளைப் பாடி மக்களின் உள்ளத்தை, குறிப்பாக, தாய்மார்களின் உள்ளத்தைக் கொள்ளை கொண்டார்கள்.

இப்படி சுமார் 30-க்கு மேற்பட்ட கலா நிகழ்ச்சிகள் நடத்தியுள்ளார்கள். தினம் 10, 20 மைல்களுக்கு அப்பாலுள்ள தோட்டங்களுக்குச் செல்ல நேரிட்டதால், அதற்கு வேண்டிய ஜீப் கார்களையும், மைக் செட்டுகளையும் தேர்தல் கமிட்டி கொடுத்து உதவிற்று.

கலை நிகழ்ச்சி ஆரம்பமாகுமுன் ஸ்தலத்தில் பொறுப்பேற்றிருக்கும் நமது தோழர்களும், தொழிலாளரில் முக்கியஸ்தர்களும், கம்யூனிஸ்ட் சொற்பொழிவாளர்களும் தேர்தலில் ரோசம்மாவை ஆதரிக்க வேண்டியதின் அவசியத்தைப் பற்றி பேசுவார்கள்.

**கோவிந்தசாமி-ராபர்ட்**

கோலார் தங்கச் சுரங்கத்தில் வேலை பார்க்கும் தொழிலாள தோழர்களான பிரமபுரம் கோவிந்தசாமியும், ராபர்ட்டும் தம் விதவிதமான பாட்டுகள் மூலமும் அருமையாக ஆட்டங்கள் மூலமும் ஆயிரமாயிரம் மக்களைக் கவர்ச்சித்து, பத்தாண்டு காங்கிரஸ் ஆட்சியின் கொடுமைகளையும் விலைவாசி ஏற்றத்தையும், வரிவீக்கத்தையும், போலீஸ் அடக்கு முறையையும், கேரள சர்க்காரின் ஒரு வருட சாதனைகளையும் அருமையாக விளக்கினார்கள். வேடன் போல் வேடம்பூண்ட கோவிந்தசாமிக்கு சரி ஜோடியாக பெண் வேடம் பூண்டு நடித்த தோழர் ராபர்ட்டின் ஆட்டமும் பாட்டுகளும், கொஞ்சமும் களைப்புறாமல் மக்களை கவர்வதிலேயே கண்ணும் கருத்துமாக இருந்த சலியா உழைப்பும் சகலருடைய பாராட்டுதலையும் கரகோஷத்தையும் பெற்றது.

**அப்பு-பிச்சைமுத்து**

கம்யூனிஸ்ட் கட்சியின் கோவை ஜில்லா கமிட்டி அங்கத்தினர் தோழர் அப்பு விஷயமே தனி அலாதியானது. திருமூர்த்தி, கோவிந்தசாமி கலை நிகழ்ச்சிகளுக்கு இருப்பதைப்போல் பாட்டுமில்லை; பக்க வாத்தியங்களுமில்லை.

பொதுக்கூட்டத்தில் பேச்சாளர்கள் பேசிமுடித்து, நன்றி நவின்றுகொண்டிருக்கும் சமயத்திலே, பேச்சு முடியாமலிருக்கும் போதே, மேடையின் பின்புறத்திலிருந்து, தன்னுடைய பெண்டாட்டியை பெரிய சத்தம்போட்டு திட்டிக்கொண்டே கூட்டத்தில் தக்புக்கென்று குதித்துமேடை முன் வந்துவிடுவார். உடனே மேஜை நாற்காலிகளெல்லாம் அகற்றப்பட்டு கலைநிகழ்ச்சி நடத்த இடம் கிடைத்துவிடும்.

தோட்டத் தொழிலாளிபோல் வேடம் தரித்து அவர் போடுகிற கூச்சலைக் கேட்டு அவருக்கு மனைவியாக வாய்த்த உடுமலை நடிகமணி பிச்சைமுத்து பெண் வேடத்துடன் வந்துவிடுவார். ஏ, யம்மா! அந்த அம்மா அலைக்கிற அலைப்பும், போடுகிற ஆட்டமும், புருஷனுடன் போடுகிற சண்டையும், புருஷன் மீதுள்ள பிரியமும், வீட்டுக் கஷ்டம், கூலி நிலைமை, கேரள சர்க்கார் செய்யும் நன்மை, காங்கிரஸ் ஆட்சி செய்த கொடுமை ரோசம்மாவுக்கு ஓட்டளிக்க வேண்டிய அவசியம் ஆகியவற்றை வெகு அருமையாக தத்ரூபமாக பார்த்தோர் அனைவரும் வயிறு குலுங்கச் சிரிக்கும்படியாக நன்கு நடித்து, மக்கள் அன்பையும் பாராட்டுதலையும் பெற்றார்கள்.

**நீங்கள் என்னை கம்யூனிஸ்ட் ஆக்கினீர்கள்**

பிரசித்திப்பெற்ற இந்த நாடகத்தை மூணாறில் இலவசமாக நடத்த கேரளக் கலைக் குழுவினர் நடத்த முற்பட்டபோது, மழை வந்து கெடுத்துவிட்டது. என்றாலும் பாட்டுக் கச்சேரி தூறலின் மத்தியில் இரவு 2 மணி வரை நடந்தது.

**பாவலர் வரதராஜன்**

கலை நிகழ்ச்சிகள் தவிர, இளம் தோழர் பாவலர் டி. வரதராஜன், தன் இனிமையான குரலால், தானே எளிய கிராமிய மெட்டுகளில் இயற்றிய தேர்தல் பாடல்களைப் பாடி, தேவிகுளம் மூணாறு மக்கள் அனைவரையும் ஆகர்ஷித்து விட்டார். அவரது பாட்டுக்குதான் வெகு கிராக்கி! காங்கிரஸ் கட்சியுடன் சேர்ந்து கொண்ட 3 தொழிற் சங்கங்களின் தலைவர்களின் போக்கை அம்பலப்படுத்தியும், பத்தாண்டு காங்கிரஸ் ஆட்சி செய்த கொடுமைகளையும், ஓராண்டு கம்யூனிஸ்டு சர்க்கார் செய்த நன்மைகளையும் பாட்டுகள் மூலமே விளக்கி வந்தார். இவருக்குதான் 2000 ரூபாய் கொடுத்து தேர்தல் முடியும்வரை தேவிகுளம் தொகுதியில் இல்லாமல் செய்ய காங்கிரஸ்காரர்கள் முயற்சித்து தோல்வியுற்றார்கள்.

தோழர் வரதராஜனுக்கு உதவியாக டேவிட் செல்லத்துரை என்ற மாணவத் தோழரும் பாட்டுகள் பாடி தோட்டத்து மக்களை மகிழ்ச்சிக் கடலில் ஆழ்த்தினர்.

**வீம்புக்கு மாவிடித்தனர்**

நமது கலைஞர்களின் புதுமைக் கலைகளுக்கு முன்னே, காங்கிரஸ்காரர்களின் கலைக் குழுக்கள் செல்லுபடியாகவில்லை.

கேரளத்திலிருந்து வரவழைக்கப்பட்ட காங்கிரஸ் கலைக் குழு, நம்பூதிரிபாட் செத்துவிட்டதாக முக்காடு போட்டுக்கொண்டு ஒப்பாரி வைத்து அழுதது. இன்னொன்று காட்டாம்பள்ளிக் கூத்து நடத்தியது. தமிழ் நாட்டிலிருந்து கூலி கொடுத்து வரவழைக்கப்பட்ட காங்கிரஸ் கலைக் கோஷ்டியொன்று, நமது தலைவர்கள் ஜீவாவையும் ராமமூர்த்தியையும் மனுஷன் பேசாத வார்த்தைகளால், படுகேவலமாகத் திட்டித் திட்டி குவித்தது. நமது பாவலர் வரதராஜன் பாடும்போதெல்லாம் கூட்டம் திரளுவதைக் கண்டு பொறுமைப்பட்ட காங்கிரஸ்காரர்களும் காளைமாட்டை புகழ்ந்து பாட்டுப் பாட பாவலர்களைக் கொண்டு வந்தார்கள். ஆனால் அவர்கள் பாடிய பாட்டுகளின் ராகங்களும், கருத்துகளும் ஒரே மயான காண்டமாயிருந்ததால், யாரும் சீந்தவில்லை.

வளர்ந்துவரும் புது உலகின் புதுமைக் கலைக்கும், மடிந்துவரும் பழைய உலகின் சுரண்டல் கலைக்கும் இடையே நடைபெற்ற கடும் போட்டியில் சுரண்டல் கலை தோற்று செத்து விழுந்தது.

நமது கலைஞர்களுக்கு தோட்டத் தொழிலாளி உணவளித்தனர். படுக்கை, கம்பளி, வெந்நீர் முதலிய சகல வசதிகளும் செய்து அன்புடன் உபசரித்து, கம்யூனிஸ்ட் அபேட்சகருக்கு ஓட்டும் அளித்து சரித்திரமே புகழும் வண்ணம் வெற்றியடையச்செய்த காட்சியை என்றுமே மறக்கமுடியாது.

—ஐ. மா. பா.

## பொருளாதார உறவை மேலும் வளர்த்துக்கொள்ள

### சோஷலிஸ்ட் நாட்டுத் தலைவர்கள் முடிவு

மாஸ்கோ, மே 25—

சோஷலிஸ்ட் நாடுகளிடையே பொருளாதாரக் கூட்டுறவை மேலும் வளர்த்துக் கொள்ள இங்குக் கூடிய சோஷலிஸ்ட் நாட்டுத் தலைவர்கள் முடிவு செய்திருக்கின்றனர்.

இப்போது ஏற்பட்டுள்ள உறவுகள் மூலம் சோஷலிஸ்ட் நாடுகளின் பொருளாதாரம் வளப்பட்டுள்ளது, சகல அம்சங்களிலும் வளம்பெற்றுள்ளது.

இந்தக் கூட்டுறவின் முறைகளை மேலும் அபிவிருத்தி செய்வது, உற்பத்தியில் விசேஷத் திறமை அடைவது, உற்பத்தித் துறையில் கூட்டுறவு இவைபற்றியும் உருப்படியான முடிவுகள் எடுக்கப்பட்டன.

பரஸ்பர பொருளாதார உதவிக் கூட்டணியில் உள்ள சோவியத் யூனியன், அல்பேனியா, பல்கேரியா, செக்கோஸ்லோவேகியா, கிழக்கு ஜெர்மனி, ருமேனியா, போலந்து, ஹங்கேரி முதலிய நாடுகளைத் தவிர மக்கள் சீனு, மங்கோலியா, வடகொரியா வடக்கு வியட்னும் முதலிய நாடுகளும் இந்த மாநாட்டில் கலந்து கொண்டன.

சோஷலிஸ்ட் நாடுகளின் பொருளாதாரத்தைப் பேணி வளர்க்க அவசியமான தயாரிப்புப் பணிகளில் எல்லா நாடுகளும் ஒத்துழைப்பதாக உறுதி எடுத்துக் கொண்டன. தத்தமக்கு உரிய துறைகளில், வளர்ச்சிக்கு ஏற்ப தக்க நடவடிக்கைகளை அமுல் நடத்தி பரஸ்பர ஒத்துழைப்பைப் பயனுள்ளதாக்கவும் முடிவு செய்யப்பட்டது.

### எஸ். டி. சி.யில் தேர்வு விகிதம் 90 சதம்

மதுரை, மே 22—

1958ம் வருடம் மார்ச் மாதம் நடைபெற்ற மதராஸ் மெட்ரிகுலேஷன் பரீட்சையில் மதுரை ஸ்டூடன்ட்ஸ் டூடோரியல் கல்லூரியில் பயின்று பரீட்சை எழுதிய மாணவர்களில் 90 சதவிகிதம் பேர் தேர்ச்சியடைந்துள்ளனர். (ந. நி.)

(4ம் பக்கத் தொடர்ச்சி)

தேவிகுளம் தேர்தல் முடிவு பற்றி எழுதியுள்ளதாவது:

"கேரள மந்திரிகள் அங்கு செல்லவில்லை. அதிகாரிகள் எந்த கட்சிக்கும் ஆதரவு காட்டாது நடு நிலைமையில் இருந்தார்கள். இதே நேரத்தில் அகில இந்தியா முழுவதிலுமுள்ள பணமூட்டைகளும் காங்கிரஸ் மந்திரிகளும் காங்கிரஸ் பிரச்சார பீரங்கிகளும் தேவிகுளத்துக்குப் படையெடுத்தன. படையெடுத்து தொழிலாளர்களுக்கு தொழிலாளர் தலைவர்களைக் காட்டி, தமிழர்களுக்கு தமிழ் வெறியை மூட்டி, பணங்காசுகளுக்கு மயங்குவோர்க்கு பணத்தாசைக் காட்டி பகீரதப் பிரயத்தனம் செய்து பார்த்தார்கள். காமராஜ், காங்கிரஸ் அபேட்சகர் வென்று விடுவார் என்று எக்காளமிட்டுப் பேசினார். ஆனால் என்ன நடந்தது? 7089 வோட்டு வித்தியாசத்தில் ரோசம்மா புன்னூஸ் வெற்றி வாகை சூடிவிட்டார். கம்யூனிஸ்டுகளுக்கும் ஜனநாயகப் பற்றுடையோர்களுக்கெல்லாம் இது மாபெரும் மகத்தான வெற்றி. இந்திய தேசீய ஜனநாயகக் காங்கிரஸ் கம்யூனிஸ்டுகளுக்கு சகலவித உதவிகளும் செய்தது என்பது குறிப்பிடத்தக்கது. எனவே, கம்யூனிஸ்டு தோழர்களின் வெற்றி இ. தே. ஜ. கா.வின் வெற்றியும்கூட.

தேவிகுளத்தில் நடந்த தேர்தல் சண்டை கம்யூனிஸ்டுகளுக்கும் காங்கிரசுக்கும் நடந்த சண்டையல்ல; ஜனநாயக சக்திக்கும் எதேச்சாதிகார சக்திக்குமிடையே நடந்த சண்டை. காங்கிரஸ் அல்லாத வேறு எந்தக் கட்சியும் ஆட்சியில் இருக்கக் கூடாதென்பது காங்கிரசாரின் ஆணவ எண்ணம். இந்த எண்ணம் வளர்ந்தால் தேசத்துக்கே பெரிய ஆபத்து. வேறு எந்த கட்சியுமே இயங்கமுடியாது இதுதான் தேவிகுளம் தேர்தலின் உட்கருத்து."

# ஐந்தாண்டுத் திட்ட வெற்றியே எங்கள் லட்சியம்

## தொழிலாளர்மீது குற்றம் சாட்டுவது அபத்தமானது

### மஸ்தூர் சங்க பொதுச் செயலாளர் கேதார்தாஸ் விளக்கம்

ஜாம்ஷெட்பூர், மே 23—

டாடா தொழிற்சாலையில் நாச வேலை செய்வதற்காகச் சதி நடந்துள்ளது என்ற குற்றச் சாட்டை மஸ்தூர் யூனியன் பொதுச் செயலாளர் தோழர் கேதார் தாஸ் ஆணித்தரமாக மறுத்து இன்று ஒரு அறிக்கை விட்டுள்ளார்.

கேதார் தாஸைக் கைது செய்வதற்கு ஒரு வாரண்ட் பிறப்பிக்கப்பட்டுள்ளதை நேயர்கள் அறிவர்.

தோழர் தாஸ் மேலும் கூறுகையில், "டாடா கம்பெனி நிர்வாகிகளுக்கும் தொழிலாளிகளுக்கும் ஏற்பட்ட, இன்னும் இருந்துவரும் ஒரு சாதாரணத் தொழிற் தகராறிலிருந்து பொதுமக்கள் கவனத்தை வேறு பாதையில் திருப்புவதற்காகவே இவ்விதக் குற்றச்சாட்டுகள் வேண்டுமென்றே கொண்டு வரப்படுகின்றன.

தொழிலாளர்கள் எப்பொழுதும் ஐந்தாண்டுத் திட்டங்களை, விசேஷமாக அடிப்படையான, கன இயந்திரத் தொழில்கள் சம்பந்தப்பட்டவைகளை வெற்றிகரமாக அமுல் நடத்துவதற்காகவே நிற்கிறோம். இந்த அபிவிருத்திக்கு தொழிலாளர் தங்கள் ஒத்துழைப்பை உறுதி கூறியுள்ளனர். அதேசமயத்தில் தங்கள் நியாயமான கோரிக்கைகள் வழங்கப்பட வேண்டுமென்றும் கோருகின்றனர். இதற்கு உத்திரவாதமில்லையேல் தொழில் அமைதி ஏற்படுவது, கஷ்டம்'' என்று தாஸ் கூறினார்.

தன்னுடைய வாதத்திற்கு ஆதரவாக அவர், மே 12ந்தேதிய அடையாள வேலைநிறுத்தத்தில் அத்தியாவசியத் தொழிலாளர்கள் ஈடுபடவேண்டாம் என்று நாங்கள் கூறியிருந்தோம், என்றார். தொழிற்சாலையின் அத்தியாவசியப் பகுதிகளில் வேலை தங்கு தடையின்றி நடைபெறுவதற்கு தொண்டர்களை அனுப்பத் தயார் என்று லேபர் கமிஷனரிடம் நாங்கள் உறுதி கூறியிருந்தோம். ஆனால் உதவிக் காரியதரிசி அலி அம்ஜாத் கைது செய்யப்பட்டதைத் தொடர்ந்து மே 20லிருந்து போலீசும், ராணுவமும் பிரயோகப்படுத்தப்பட்டதுதான் நிலைமையை துக்ககரமாக மாற்றியது; வெடிக்கும் தன்மையை ஏற்படுத்தியது.

"அடையாள வேலைநிறுத்தத்திற்குப் பிறகுகூட நிலைமை அமைதியாகவே இருந்தது. ஆனால் மஸ்தூர் யூனியனின் வெற்றியைக் கண்டு ஆத்திரப்பட்டு, நிதானமிழந்த நிர்வாகம் 120 தொழிலாளர்களைப் பழி வாங்கியதினால்தான் நிலைமை மோசமாயிற்று.

"இந்தப் பிரச்னைக்குத் தீர்வு காணுவிடில் வேலை நிறுத்தம் நீடிக்கும்'' என்று கேதார் தாஸ் கூறினார்.

மே 20-ந் தேதியன்று நடைபெற்ற போலீஸ் துப்பாக்கிப் பிரயோகம் பற்றியும் அதைத் தொடர்ந்த சம்பவங்கள் பற்றியும் பகிரங்க விசாரணை நடைபெற வேண்டும். தொழிற்சங்கக் காரியாலயத்தை தொழிற்சங்க நிர்வாகிகளிடமே திரும்பக்கொடுத்துவிடவேண்டும் என்றும் தாஸ் கோரியுள்ளார்.

# உத்திரபிரதேசில் ஐம்பத்திரண்டு போலீஸ்காரர்களுக்குச் சிறை

## சங்கம்வைத்து வெளியார்களை நிர்வாகிகளாக்கியதற்காக

லட்சுமணபுரி, மே 22—

உத்திரபிரதேசில் 52 போலீஸ்காரர்களுக்கு இன்று 6 மாத சிறை தண்டனை விதிக்கப்பட்டது. சென்ற அக்டோபரில் போலீஸ்காரர்கள் சங்கம் அமைத்து அதற்கு இரு வெளியாட்களை தலைவர், உபதலைவராகத் தேர்ந்தெடுத்தார்களாம். இதை உத்திர பிரதேச சர்க்கார் ஆட்சேபித்தது. உடனே போலீஸ்காரர்கள் உள்ளிருப்பு வேலைநிறுத்தம் செய்ததோடு, சிலர் உண்ணுவிரதமும் இருக்க ஆரம்பித்தார்கள். அதோடு போலீஸ் லைனுக்கு வெளியே பெரிய ஆர்ப்பாட்டமும் நடத்தினார்கள். இதன் விளைவாகவே 52 போலீஸ்காரர்கள் கைது செய்யப்பட்டு இப்போது அவர்களுக்கு தண்டனை விதிக்கப்பட்டுள்ளது. சிறை தண்டனை விதிக்கப்பட்ட போலீஸ்காரர்கள் மேல் நீதி மன்றத்திற்கு அப்பீல்செய்துகொள்ள சொந்த ஜாமினில் விடுதலை செய்யப்பட்டுள்ளார்கள்.

# ஒரிசா மந்திரிசபை மீண்டும் உயிர் பெறுகிறது

## கவர்னரின் செயல்

புவனேஸ்வர், மே 24—

மே 9-ந் தேதி கவர்னரிடம் சமர்ப்பித்த ஒரிசா மந்திரி சபை ராஜினாமாவை இன்று முதல் மந்திரி டாக்டர் ஹரிகிருஷ்ண மெகதாப் வாபஸ் பெற்றுக்கொண்டார். மெகதாபையே தொடர்ந்து பதவியிலிருக்கும்படி கவர்னர் கேட்டுக் கொண்டுள்ளார்.

இது சம்பந்தமாக கவர்னர் சார்பில் வெளியிடப்பட்டுள்ள ஒரு அறிக்கையில் மாற்று மந்திரிசபை அமைக்க எதிர்க் கட்சியினருக்கு சந்தர்ப்பம் அளிக்கப்பட்டதென்றும் ஆனால் தங்களுக்கு பெரும்பான்மை இருக்கிறதென்று எதிர்க் கட்சியினரால் நிரூபிக்க முடியவில்லையென்றும், இதே சமயத்தில் ஜார்க்கண்ட் கட்சியின் ஆதரவோடு காங்கிரஸுக்கு பெரும்பான்மை இருக்கிறதென்றும், ஆகவே ஒரிசாவில் ஜனாதிபதி ஆட்சி ஏற்படுவதைத் தவிர்க்க மெகதாப் மந்திரி சபை மீண்டும் தொடர்ந்து இருக்கக் கேட்டுக் கொள்ளப்பட்டிருப்பதாகவும் குறிப்பிடப்பட்டுள்ளது.

# சென்னை முதல் மந்திரி முன்னால் கிராமவாசிகள் ஆர்ப்பாட்டம்

## நஷ்டஈடுபற்றிகுண்டா பிரதேசத்தில் அதிருப்தி

உதகை, மே 24—

குந்தா திட்டத்திற்காக சர்க்கார் எடுத்துக்கொண்ட தமது நிலங்களுக்குத் தகுந்த நஷ்டஈடு கொடுக்கவில்லை என்று தமது ஆட்சேபத்தைத் தெரிவிப்பதற்காக அட்டபோலு கிராமத்திலுள்ள ஊர்வாசிகள் முதலமைச்சர் காமராஜர்முன் ஆர்ப்பாட்டம் நடத்தினார்கள்.

தமது குறைகளைப் பற்றிய ஒரு மகஜரையும் சமர்ப்பித்தார்கள். சிலர் அவரது காரின் முன்னால் படுத்துக் கொண்டார்கள் எனத் தெரிகிறது.

முதலமைச்சர் காமராஜர் பிரதம மின்சார எஞ்சினீயர் அப்பாதுரையுடன் குண்டா ஜல மின்சாரத் திட்டத்திற்குச் சென்றிருந்தார். அங்குதான் இந்த சம்பவம் நடைபெற்றது. சர்க்கார் எடுத்துக் கொண்ட நிலங்களுக்கு நியாயமான நஷ்டஈடு வழங்கப்படவில்லை என்ற அதிருப்தி இப் பிரதேச மக்களிடை அதிகமாகக் காணப்படுகிறது.

## குபேர் ஊழலை...

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

பேசினார். கூட்டத்துக்கு தோழர் வைத்தியலிங்கம் அவர்கள் தலைமை வகித்தார். தோழர்கள் டாக்டர் ரங்கநாதன், ஆள்வார் முதலியவர்களும் பேசியபின், மக்கள் மத்தியிலே தீவிர இயக்கமாகியுள்ள கீழ்க்கண்ட முக்கிய தீர்மானம் நிறைவேற்றப்பட்டது:

### குபேர் ஊழல்களை விசாரணை நடத்து

"பிரெஞ்சு ஆதிக்கம் இருந்தபோது, குபேர் கும்பல் நடத்திய லஞ்சமும், ஊழல்களும், மோசடிகளும், அதிக்கிரமங்களும் ஒரு பக்கமிருந்தாலும் சுதந்திரம் கிடைத்து இந்த குபேர் பதவி ஏற்ற பிறகு, நாளதுவரை நடத்தி வந்த அதிகார துர்வினியோகங்களையும் லஞ்ச ஊழல்களையும் விசாரணை செய்யவேண்டுமென்று சர்க்காரைக் கேட்டுக்கொள்ளுவதாக தீர்மானம் நிறைவேற்றினர்கள், இதுபற்றி ஏற்கனவே மத்திய சர்க்காருக்கு விரிவான புகார் மகஜர் ஒன்றை அனுப்பப்பட்டிருப்பதாகவும் தெரியவருகிறது.

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

மானால் ஒரு நீதி மன்ற விசாரணை நடத்திப்பார்க்கட்டும். அப்போது உண்மை வெளியாகி தீரும்.

### பலாத்காரத்தை ஆரம்பித்தது யார் ?

தொழிலாளர்கள் பலாத்காரத்தில் இறங்கியதாகக் கூறப்படுவது பற்றிய ஒரு கேள்விக்கு டாங்கே பதிலளித்ததாவது :

தொழிலாளர்கள் தரப்பில் பலாத்காரம் கையாளப்பட்டிருந்தால் அதை நிச்சயமாக நாங்கள் கண்டிக்கிறோம். ஆனால் பலாத்காரத்தில் முதலில் இறங்கியது யார். இவற்றிற்கெல்லாம்பொறுப்பாளி யார் என்பது குறித்து ஒரு பகிரங்க விசாரணை நடத்தியாக வேண்டும் அப்போதுதான் குற்றவாளிகள் யார் என்பது தெரியவரும்.

### பழிவாங்கல்

12-ம் தேதி அடையாள வேலை நிறுத்தம் செய்த பிறகு பல தொழிலாளர்கள் பழிவாங்கப்பட்டுள்ளார்கள். இது நிச்சயமாக ஆத்திர மூட்டும் செய்கையாகும். இந்தச் சமயம் ஒரு நிருபர் குறுக்கிட்டு, வேலை நிறுத்தம் சட்ட விரோதமானது என்று பீகார் சர்க்கார் அறிவித்திருக்கையில், வேலை நிறுத்தம் செய்தவர்களை சஸ்பெண்ட் செய்வது நியாயம் தானே என்று கேட்டார். இதற்கு டாங்கே பதில் கூறுகையில், ஒரு வேலை நிறுத்தம் சட்ட விரோதமானது என்று சர்க்கார் நினைப்பதால் மட்டும் அது சட்ட விரோதமாகிவிடாது; அந்த வேலை நிறுத்தம் சட்ட விரோதமானதா, இல்லையா என்பதை தற்போதுள்ள தொழில் சட்டங்கள்படி ஒரு தொழில் கோர்ட்தான் தீர்மானிக்க வேண்டும் என்றார்.

# அணு ஆயுத சோதனைகளை நிறுத்தும் விஷயம்

## கட்டுப்பாட்டு முறைகளைக் கற்றறிய நிபுணர்கள் கூட்டம்

### ஐஸன்ஹோவர் ஆலோசனை

வாஷிங்டன், மே 24—

அணு ஆயுத சோதனைகள் நிறுத்துவதைப் பரிசீலிக்க அவசியமான கட்டுப்பாட்டு நடவடிக்கைகள் எடுப்பதுபற்றி அமெரிக்க, பிரிட்டிஷ், பிரெஞ்சு, ரஷ்ய தொழில்நுட்ப நிபுணர்கள் ஜெனிவாவில் இன்னும் மூன்றுவார காலத்திற்குள் கூடி ஆலோசனைகள் நடத்தலாம் என்று அமெரிக்க ஜனாதிபதி ஐஸன்ஹோவர் சோவியத் பிரதமர் நிகிதா குருஷ்சேவுக்கு எழுதியுள்ள கடிதமொன்றில் குறிப்பிட்டுள்ளார்.

சோதனைகளைத் தடை செய்த பிறகு அதை மீறி ஏதாவது நடத்த முடியுமா என்பதை கண்டுபிடிப்பதற்கு ஏற்ற முறைகளை வகுக்க வேண்டுமென்றும் இதற்கு நிபுணர்கள் கூடிப் பேச வேண்டும் என்றும் பொதுவான கருத்து இருப்பதாக அவர் குறிப்பிட்டுள்ளார்.

இந்த ஆராய்ச்சியில் ஈடுபடும் நிபுணர்கள் விஞ்ஞான அடிப்படையில் மட்டுமே முடிவுகளைக் கூறுவார்கள் என்றும் இந்த நிகழ்ச்சிகள் யாவும் ஐ நா.வுக்கு அதன் பொதுச்செயலாளர் மூலம் அறிவிக்கப்படும் என்றும் தெரிகிறது.

# இந்திய மேதைகளுக்கு சோவியத் அஞ்சலி

## சோவியத்-இந்திய கலாசார உறவுக் கழகப் பணிகள்

புதுடில்லி, மே 23—

வந்தேமாதரத்தின் ஆசிரியரும் பிரபல வங்க எழுத்தாளரும் தேசாபிமானியுமான பங்கிம் சந்திர சாட்டர்ஜியின் 120.வது பிறந்ததின விழா, பிரபல விஞ்ஞான ஜே. சி. போஸ் 100-வது ஆண்டு பிறந்ததின விழா, தலைசிறந்த சமூக சீர்திருத்தத் தலைவர் ராம்மோஹன் ராயின் 120-வது பிறந்த தினம், கவி கபீர்தாஸரின் 448.வது பிறந்த தினம் இவை யாவும் இந்த ஆண்டு சோவியத் நாட்டில் கொண்டாடப்படும்.

இந்த இந்திய மேதைகளை கவுரவிக்கும் விழாக்களை சோவியத் இந்திய கலாசார உறவுக் கழகம் ஏற்பாடு செய்திருக்கிறது.

மாஸ்கோவில் நிறுவப்பெற்றுள்ள இந்தக் கழகம் இந்திய மக்களின் வாழ்வு, கலை, விஞ்ஞானம் கலாசாரம் இவைபற்றி சோவியத் மக்களுக்கு எடுத்துக் கூறும் பணியை மேற்கொண்டிருக்கிறது.

இந்தியாவிலுள்ள பல் வேறு ஸ்தாபனங்களுடன் தொடர்பு கொண்டும், இந்தியக் கண்காட்சிகள் ஏற்பாடு செய்தும் இந்த கழகம் பணிபுரியும்.

# ஆயிரக் கணக்கான சங்குகுளி தொழிலாளர்களின் அவதி

## குத்தகைதார்கள் அடம்பிடிப்பதின் விளைவு

கீழக்கரை, மே 22—

இராமநாதபுரம் ஜில்லா, சங்கு குத்தகைதார் கே. டி. எம்., டி. எம். அண்டு கம்பெனியார், காரங்காடு, மோர்பண்ணை. திருப்பாலைக்குடி, தேவி பட்டணம் ஆகிய ஊர்களில் சங்கு குளிக்கும் காலம் ஆரம்பித்து ஒரு மாதமாகியும் இன்று தேதிவரை சங்கு குளிக்காமல் இருக்கிறார்கள். மேலும் காரங்காடு சங்குகளுக்கு மட்டும் 0-6-0 கூலி கொடுக்கப்படுகிறது. அதே அளவு, அதே தரமுள்ள மற்ற ஊர் சங்குகளுக்கு 0-5-9 கூலி கொடுக்கப்படுகிறது. இதே தரம், இதே அளவுள்ள தொண்டி சங்குகளுக்கு, சிவகங்கை சங்கு குத்தகைதாரரான ஏ. எம். எஸ். அண்டு எஸ். வி. எம் கம்பெனியார் 0-6-0 கூலிகொடுக்கிறார்கள்.

ஆகவே மேற்கண்ட எல்லா ஊர்ச் சங்குகளுக்கும் 0-6-0 கூலி தரவேண்டும் என்றும், உடனடியாக சங்கு குளிக்க அனுமதிதர வேண்டும் என்ற கோரிக்கைகள் சம்பந்தமாக பேச்சுவார்த்தை நடத்த, ஜில்லா சங்குகுளி தொழிலாளர் சங்க காரியதரிசியும், தமிழ்நாடு சங்குகுளி தொழிலாளர் சங்க சம்மேளன உபதலைவருமான தோழர் வேலுச்சாமியும் பெரிய பட்டணம் சங்கு குளி தொழிலாளர் சங்கக் காரியதரிசி எம். எம். அப்துல் காதரும், மேற்படி சங்க நிர்வாக உறுப்பினர் எம். ஷாகுல் ஹமீதும் 21-5-58 செவ்வாய்க்கிழமை மாலை 5-30 மணிக்கு குத்தகைதார்களோடு பேச்சுவார்த்தைகள்நடத்தச்சென்றார்கள். மேற்படி குத்தகைதார், நான் உங்களோடு பேச்சுவார்த்தை நடத்த தயாரில்லை என்றும், சர்க்கார் தலையிட்டுத்தீர்த்துவைத்தால்தான்நாங்கள் தொழில் ஆரம்பிப்போம் என்றும் சொல்லி விட்டார்கள். குத்தகைதார் பிடிவாதமாக தொழிலை ஆரம்பிக்க மறுப்பதால் ஆயிரக் கணக்கான சங்கு குளி தொழிலாளர்களும், அவர்கள் குடும்பங்களும் ஒரு மாத காலமாக கஷ்ட நஷ்டப்பட்டுக் கொண்டு இருக்கிறார்கள்.

இது சம்பந்தமாக மதுரை லேபர் ஆபீஸரை தலையிடக் கோரி ஒரு மெமோராண்டம் லேபர் ஆபீஸருக்கு அனுப்பப்பட்டுள்ளது. இன்னும் காலதாமதப்படுத்தினால் தொழிலாளர்கள் ஆத்திரமடைய நேரிடும் என்பதை தெரிவித்துக் கொள்கிறேன்.

## உதகையில் தோழர் கல்யாணசுந்தரம்

சேலம், மே 23—

தோழர் எம். கல்யாணசுந்தரம் எம்.எல்.ஏ., 25-5-58-ல் கோவையில் தங்கி இருப்பார். 26-5-58 அதிகாலை நீலகிரி எக்ஸ்பிரஸில் புறப்பட்டு ஊட்டிக்கு செல்வார். 25-5-58 முதல் 30-5-58 முடிய ஊட்டியில் நடைபெறும் செலக்ட் கமிட்டிக் கூட்டத்தில் கலந்து கொள்வார். இந்த செலக்ட் கமிட்டிக் கூட்டத்தில் விவசாய வருமான வரி, சட்டசபை நடைமுறை விதிகள்பற்றி விவாதிக்கப்படும் என தெரிய வருகிறது.

பின்னர் அவர் 30-5-58 இரவு புறப்பட்டு 31-5-58 காலை சேலம் வந்தடைவார். 31-5-58 சூரமங்கலம் "யூசுப்" மரணம்பற்றி சேலம் ஆர். டி. ஓ. அவர்கள் நடத்தும் விசாரணையில் ஆஜராவார். 4-6-58 வரை சேலத்தில் கல்யாணம் இருப்பார் எனவும் தெரிகிறது.

# தேவிகுளம்: ஜனநாயகத்தின் வெற்றி

## கம்யூனிஸ்ட் ஆட்சியின் ஜனநாயகப் பண்பு
## காங்கிரஸின் ஜனவிரோதப் பண்பு

### பிளிட்ஸ், சுவராஜ்யா, பேரிகை பத்திரிகைகளின் கருத்துரைகள்

சென்னை, மே 25—

**தேவிகுளம் தேர்தல் பற்றி பிரபல ஆங்கில வாரப் பத்திரிகையான 'பிளிட்ஸ்' 'தேவிகுளம் தேர்தல் படிப்பினை' என்னும் தலைப்பில் பின்வருமாறு எழுதியுள்ளது:—**

தேவிகுளம் உபதேர்தலில் கம்யூனிஸ்டு அபேட்சகர் அடைந்த மாபெரும் வெற்றி பற்றி காங்கிரஸ் தலைமைப்பீடம் ஏன் அதிர்ச்சியுற வேண்டும்? நெருப்புக்கோழி தன் தலையை மணலுக்குள் புதைத்துக் கொண்டு விட்டால் யாருக்குமே தெரியாது என்பதுபோல, தேர்தல் முடிவு 'எதிர்பாராததாக இருக்கிறது' என்று கேரள காங்கிரஸ் தலைவர் கதைக்கிறார். இன்னும் கோர்ட்டில் தோற்றுப் போன கட்சிக்காரர்போல இந்தத் தோல்விக்கு, கம்யூனிஸ்டுகள் முறை தவறான செயல்களில் ஈடுபட்டதே காரணம் என்று வேறு கேரள காங்கிரஸ் தலைவர் தாமோதர மேனன் பழிசுமத்தக் கிளம்பியுள்ளார். ஆனால் உண்மையில் தேவிகுளத்தில் நிகழ்ந்திருப்பது எல்லாம் அங்கு மற்றொரு 'மௌதாகா' நடந்திருப்பதுதான். (சமீபத்தில் உத்திரபிரதேசில் மௌதாகா தொகுதியில் மாஜி மந்திரியும், உ. பி. காங்கிரஸ் பீமன் என்று சொல்லப்படுபவருமான சி. பி குப்தா இரண்டாம் முறையும் படுதோல்வி அடைந்தார்).

**மௌதாகா**

மௌதாகாவில் காங்கிரஸ் தனது சக்திகளையெல்லாம் பயன்படுத்தி பல திருவிளையாடல்கள் செய்து பார்த்தது. கான்பூரில் பண்டல முழுவதும் காங்கிரசுக்குக் கச்சைக்கட்டி நின்றது. அப்படியிருந்தும் அங்கு காங்கிரஸ் படுதோல்வியடைந்து, தொகுதியின் சமூக, பொருளாதார சக்திகளைப் பிரதிபலிக்கும் இடதுசாரி அபேட்சகரே வெற்றி வாகை சூடினார்.

**சந்தர்ப்பவாதக் கூட்டு**

இதுதான் தேவிகுளத்திலும் நடந்துள்ளது. இந்த உண்மையை காங்கிரஸிலுள்ள பாசிஸ்டுகள் ஒப்புக்கொள்ளமாட்டார்கள். இந்த உபதேர்தலிலே, காங்கிரஸ், பி. சோ., முஸ்லிம் லீக், கிறிஸ்டோப குண்டர்கள் ஆகியோர்களிடையே கொள்கையற்ற, சந்தர்ப்பவாத கூட்டு ஏற்பட்டது. இன்னும் இந்த உபதேர்தலில் மத்திய மந்திரிகள் கலந்துகொள்ளக் கூடாது என்று நேரு யோசனை கூறியிருக்க, இரண்டு சென்னை மந்திரிகள் அங்கு ஓடோடிச் சென்றுள்ளார்கள்.

**காங்கிரஸின் தார்மீகம்**

காங்கிரஸின் தார்மீகப் பண்பு எவ்வளவு கீழ்த்தரமாகப் போய் விட்டது என்பதற்கு ?து ஒரு எடுத்துக்காட்டு. ஜாதி வெறியையும் மாகாண வெறியையும் கண்டித்து வெகு அண்மையில்தான் காங்கிரஸ் காரியக் கமிட்டி தீர்மானம் நிறைவேற்றியுள்ளது. இந்தத் தீர்மானத்தின் மை உலருவதற்குள்ளாகவே, அதே ஜாதி வெறியையும், ராஜ்ய வெறியையும், கிளப்பிவிட தேவிகுளத்திற்கு பறந்து சென்றார்கள் என்பது வெட்கக்கேடானதாகும். அதிலும் அரிஜன மந்திரி கக்கன் ஒரு குறுகிய நோக்கோடு பிரச்சாரம் செய்ய அனுப்பப்பட்டது இன்னும் கேவலமானதாகும்.

என்ற போதிலும் இவற்றையெல்லாம் முறியடித்து கம்யூனிஸ்ட் அபேட்சகர் ரோசம்மா வெற்றி பெற்றுவிட்டார். அவர் ஒரு சிறந்த தொழிலாளர் ஊழியர்; அந்தத் தொகுதி மக்களின் அபிலாஷைகளைப் பிரதிபலிப்பவர். அவர் தனது ஸ்தானத்தை மீண்டும் பெற்று விட்டது மட்டுமல்ல; முன்னைவிட அதிகமான வோட்டுகளையும் அவர் பெற்றிருப்பது குறிப்பிடத்தக்கதாகும்.

**படிப்பினை**

இந்தத் தேர்தல் மூலம் கிட்டியுள்ள ஒரு மிக முக்கிய படிப்பினை ஜாதி, மொழி வெறியைக் கிளப்பி தொழிலாளர்களை ஏமாற்ற முடியாது என்பது. இதே நேரம் பட்டம் தாணுப்பிள்ளை காங்கிரசுக்கு ஆதரவாக பிரச்சாரம் செய்கிறார் என்பதனால், அவரது ஆட்சி காலத்தில் கொடிய அடக்குமுறைக்கு ஆளான தமிழ் மக்கள் கம்யூனிஸ்ட் கட்சிக்கு வோட்டளித்திருப்பார்கள் என்பதிலும் சந்தேகமில்லை.

**எதிர்காலம்**

சரி, இனி எதிர்காலம் பற்றி என்ன? இத் தொகுதி மக்கள் சென்ற தேர்தலிலும் கம்யூனிஸ்ட் கட்சி மீது விசுவாசம் வைத்தார்கள்; இப்போதும் விசுவாசம் வைத்துள்ளார்கள். இது பெரிய அளவுக்கு கேரளம் முழுவதற்கும் கூட பொருந்தும். கேரள முதல் மந்திரி மிகவும் தன்னடக்கத்தோடு இந்த வெற்றியைக் கணித்து எதிர்க்கட்சிகளின் ஒத்துழைப்பை நாடியுள்ளார். அவர் நீட்டிய நேசக்கரம் ஏற்கப்படவேண்டும். இதற்கு முதலில் கேரள சர்க்கார் பற்றியும், கம்யூனிஸ்டுகள்பற்றியும் மத்திய மந்திரிகளும், இதர ராஜ்ய மந்திரிகளும் அனுவசியமாகவும், ஆத்திரமூட்டும் வகையிலும் பேசித் தாக்கிவருவது நிறுத்தப்பட வேண்டும்.

**சுவராஜ்யா**

காசா சுப்பாராவை ஆசிரியராகக் கொண்ட 'சுவராஜ்யா' என்னும் ஆங்கில வாரப் பத்திரிகை தேவிகுளம் தேர்தல்பற்றி எழுதியிருப்பதின் சாரமாவது:

தேவிகுளத்தில் கம்யூனிஸ்ட் அபேட்சகர் வெற்றி பெற்றிருப்பதானது காங்கிரஸ் தலைமையை மக்கள் எவ்வளவு தூரம் வெறுக்கிறார்கள் என்பதற்கு ஒரு அறிகுறியாகும். இந்தத் தேர்தலிலே காங்கிரஸ் செய்யாத ஒரு நல்ல மரபை கம்யூனிஸ்ட் கட்சி அனுஷ்டித்தது. இது வாக்காளர்களைக் கவர்ந்திருக்கும் என்பதில் சந்தேகமில்லை.

**கம்யூனிஸ்ட் மரபு**

வாக்காளர்கள் தங்கள் இஷ்டப்பூர்வமாக வோட்டளிப்பதில், சர்க்கார் நிர்வாக யந்திரம் குறுக்கிடாது என்று கேரள மந்திரிகள் உறுதி கூறினார்கள். இந்த உறுதி மொழியை அவர்கள் காப்பாற்றவும் செய்தார்கள். தேர்தல் பிரச்சாரத்தில் எந்த கம்யூனிஸ்ட் மந்திரியும் கலந்துகொள்ளவில்லை. காங்கிரஸ் அனுஷ்டிக்கும் போக்குக்கு இது முற்றிலும் மாறுபட்டதாகும்.

இந்தத் தேர்தலில் காங்கிரஸ்காரர்கள் தங்கள் பிரச்சார வசதிகள் முழுவதையும் அண்டை ராஜ்யங்களிலிருந்தும் ஏன் டெல்லியிலிருந்துங்கூட கொண்டு வந்து பயன்படுத்தினார்கள். சென்னை முதல் மந்திரி காமராஜரும் இதர மந்திரிகளும் தேவிகுளம் பறந்து சென்று வோட்டுப் பிடிக்கும் ஏஜண்டுகளாக மாறினார்கள். பிரதமர் நேருவேகூட மற்றெல்லா சமயங்களையும்விட்டு தேர்தல் வேலை பார்த்து கேரளத்திற்கு விஜயம் செய்தார். இதன் மூலம் அவருக்குத் தெரிந்தோ தெரியாமலோ, தேவிகுளம் தேர்தலில் காங்கிரஸுக்கு வெற்றி சந்தர்ப்பத்தை ஆதரிக்கவே கேரளம் வருகை தந்தார் என்ற எண்ணத்தை பலரிடையே ஏற்படுத்தி விட்டார். ஆனால் நேருவைக் காட்டி வோட்டுகள் பெற்றுவிடலாம் என்ற காலம் மலையேறி விட்டது என்பதை தேவிகுளம் நிரூபித்து விட்டது. இதே போல திருமதி இந்திரா காந்தியை அனுப்பி பெண் வாக்காளர்களை கவர்ச்சிக்கலாம் என்ற முயற்சியும் தோல்வி கண்டு விட்டது.

**காங்கிரஸ் போக்கு**

இதுவரை சென்னையிலும், இதர ராஜ்யங்களிலும் காங்கிரஸ் ஆளும் கட்சி என்ற அந்தஸ்தைப் பயன்படுத்திக் கொண்டு எதிர்க்கட்சிகளுக்குள்ள வெற்றி வாய்ப்புகளை எல்லாம் சீர்குலைத்து வந்தார்கள்; காங்கிரஸ் மந்திரிகள் பெரும் பணக்காரர்களை தங்கள் தேர்தல் பிரச்சாரத்திற்குப் பணம் கொடுக்கும்படி செய்தார்கள். சுருங்கச் சொன்னால் பணம், நிர்வாக யந்திரம் முதலிய அனைத்துமே தேர்தல் அரங்கில் காங்கிரஸுக்குப் பயன்பட்டன. இதை எதிர்த்துக் கிளம்பும் ஆட்சேபணைகளை அவர்கள் காதில்கூட போட்டுகொள்வது கிடையாது. கேரளத்திலோ இதற்கு மாறாக இப்போது நடந்துள்ளது.

**கம்யூனிஸ்ட் ஆட்சி பரவலாம்**

தேவிகுளம் வெற்றி கம்யூனிசத்துக்குக் கிடைத்த வெற்றி என்று சொல்வதைவிட காங்கிரஸின் ஊழல் போக்கை எதிர்த்துக் கிடைத்த வெற்றி என்றே சொல்லவேண்டும். காங்கிரஸின் இதே சீர்குலைவு போக்கு நாட்டின் இதர பெரிய பகுதிகளில் கம்யூனிஸ்ட் ஆட்சியையும், செங்கொடியையும் வேரூன்றச் செய்ய செய்தாலும் செய்யலாம்.

**பேரிகை**

திரு. எஸ். எஸ். மாரிசாமியை ஆசிரியராகக் கொண்டு வெளிவரும் தமிழ் வாரப் பத்திரிகையான 'பேரிகை' ''மக்கள் மகிழ்ந்திட மாடுகள் கதறிட ரோசம்மா வாகை சூடினார்'' என்ற தலைப்பில்

(2-ம் பக்கம் பார்க்க)

# காங்கிரஸில் லட்சாதிபதியாகும் மர்மமென்ன?

## மொரார்ஜி மகன் காந்திலாலின் கதை

### 'மராத்தி' ஆசிரியர் பி. கே. ஆத்ரே அம்பலமாக்குகிறார்

பம்பாய், மே 20—

**மத்திய சர்க்கார் நிதியமைச்சர் மொரார்ஜி தேசாயின் மகன் காந்தி லால் தேசாய் பற்றிப் பம்பாயிலிருந்து வெளிவரும் மராத்தி தினசரி பத்திரிகையில் அதன் ஆசிரியர் பி. கே. ஆத்ரே எழுதியுள்ள கட்டுரையின் சாரத்தைக் கீழே தருகிறோம்.**

மக்கள் சபையின் முன்னாள் சபாநாயகர் ஜி. வி. மவ்லங்கர் இறந்த பொழுது, அவருக்கு 90 லட்சம் ரூபாய் சொத்து இருந்ததாம். தன்னலமற்ற சேவைக்கு உடல் பொருள்ஆவி எல்லாம் அர்ப்பணம் செய்து விட்டதாகக் கூறப்படும் இப்படிப்பட்டவர்களுக்கு இத்தனை பெரிய அளவு சொத்துச் சேர்ந்திருப்பதன் மர்மம் என்ன?

காந்திலால் தேசாய் மொரார்ஜி தேசாயின் மகனாவார். அவருக்கு வயது முப்பதுக்கு மேலிருக்கும். ஆயினும் இதற்குள் அவர் ஒரு லட்சாதிபதியாகி விட்டார்!

ஐந்தாண்டுகளுக்கு முன்னால் இவர் டாட்டா கம்பெனியில் மாதம் ரூ. 150 சம்பளம் பெறும் ஒரு ஊழியராக இருந்தார். இப்போது இவரது மாத வருமானம் ஐந்து இலக்கங்களைத் தாண்டி விட்டது.

நியூ இந்தியா லைப் இன்ஷூரன்ஸ் கம்பெனியில் ஒரு கான்வாசராகச் சேர்ந்த நாள்தொட்டு காந்திலால் ஒரு பெரும்புள்ளியாகி விட்டார். மொரார்ஜிக்கு மகிழ்ச்சியூட்ட வேண்டும் என்ற நோக்கமுள்ள பலர் காந்திலாலின் விருப்பப்படி இன்ஷூரன்ஸ் பாலிசிகள் எடுக்கலாயினர். கமிஷனாக காந்திக்கு லட்சக் கணக்கில் பணம் புரண்டது.

இந்தப் பணத்தில் பெருந்தொகை மொரார்ஜி தேசாயின் மகள் பெயரில் சேர்த்து வைக்கப்பட்டிருந்ததாம். இந்த மகள் பின்னால் தற்கொலை செய்து கொண்டதாகத் தெரிகிறது. அவள் பேரிலிருந்து சொத்துக்கள் என்னவாயின என்பது தெரியவில்லை.

பின்னால் காந்தி பம்பாய் ஜெனரல் டிரேடர்ஸ் (பிரைவேட் லிமிடெட்) என்ற பெயரால் ஒரு கம்பெனி தொடங்கினார். தமக்குக் குடியிருக்கவும் ஆபீஸ் நடத்தவும் வேண்டி பம்பாய் 'மெரைன் டிரைவ்'இல் ஏஷியானா என்ற ஐந்தடுக்கு மாளிகையை அவர் வாடகைக்கு அமர்த்தினார். மொகலாய சக்கரவர்த்திகள்கூடப் பெருமைப்படும் ராஜ மாளிகையாகும் அது.

இந்தக் கட்டிடத்திற்கு உபகரணங்கள் அலங்கார அணிகளுக்காக ஒன்றரை லட்சம் ரூபாய் அவர் செலவழித்தார்.

ஏஷியானா மாளிகையின் சுல்தான் என்று காந்திலாலை அவரது நண்பர்கள் அழைத்து வந்தார்கள், என்றால் அந்த மாளிகையின் டாம்டமார ஆடம்பர அட்டகாசங்களை வர்ணிப்பானேன்.

மொரார்ஜி அடிக்கடி பம்பாய் செல்வார். பம்பாய்க்கு விஜயம் செய்யும்போதெல்லாம் மகனுடைய மாளிகையில் தங்குவதுண்டு. தந்தையைத் திருப்திப் படுத்துவதற்காக மாளிகையில் ஓர் அறை மட்டும் கதர் மயமாக வைத்திருந்தார் காந்திலால்.

பம்பாயிலுள்ள பிரபல தொழிலதிபர், ஆலை முதலாளிகள், வர்த்தகர் வரிசையில் காந்திலால்இடம் பெற்றுவிட்டார். அவரது முக்கியமான வர்த்தகம், பம்பாய் பஞ்சாலைகளுக்கு யந்திர தளவாடங்கள் சப்ளை செய்வது. குவாலியரிலுள்ள பிர்லா மில் இப்போது காந்திலாலின் உடமை. இவ்வாறு ஏறுமுகத்தில் இருக்கிறார் அவர்.

ஷா கன்ஸ்ட்ரக்ஷன் (பிரைவேட் லிமிடெட்)என்ற கம்பெனியில் காந்திலாலுக்கு 18 சதவிகிதம் பங்குண்டு. பம்பாய் அரசாங்க செக்ரடேரியட் கட்டிட நிர்மாண வேலைகள் இந்தக் கம்பெனிகளுக்கே கண்ட்ராக்ட் விடப்பெற்றுள்ளன. மகாராஷ்டிரத்திலேயே மிகப் பெரிய அணைக்கட்டான கொயினா அணைக்கட்டுத் திட்டமும் இந்தக் கம்பெனி எடுத்து நடத்துகிறது. கோடிக்கணக்கில் பணம் புரளும் ஒரு வேலை இது.

அண்மையில் காந்திலால் மேற்கு ஜெர்மனிக்கு ஒரு வர்த்தக தூதுகோஷ்டியுடன் சென்று வந்தார். அங்கு அவர் தாம் 'வருங்கால இந்தியப் பிரதமரின் மகன்' என்று பொருள்படும் வண்ணம் சண்டப் பிரசண்டங்கள் செய்திருக்கிறார். அவ்வாறு தன்னைத்தானே அறிமுகப்படுத்திக் கொண்டாராம்.

குளுகுளுவென்று ஏர்கண்டிஷன் செய்த ஒரு கார் அவருக்கு பரிசாகக் கிடைத்தது.

'விப்ஜியர்' என்ற ஒரு தனியார் கம்பெனியின் நிர்வாகமும் இப்பொழுது காந்திலாலிடம் இருக்கிறது. சாராபாய் ரசாயனத் தொழிற்சாலையில் இவர் ஒரு பங்குதாரர். ஸ்டாண்டர்ட் வாகுவம் கம்பெனியும், 'வருங்காலப் பிரதமர் மகனை' சந்தோஷப் படுத்தவேண்டிய ஏற்பாடுகள் செய்துள்ளது. பம்பாய் சர்க்கார் அதிகாரிகளுக்கும் ஸ்டாண்டர்டு வாகுவம் கம்பெனி அதிகாரிகளுக்கும் சலுகை அளிக்க காந்திலாலின் உயர்தர சேவை' என்றும் உண்டு. சர்க்கார் பெயரளவில் ஒரு தொகைக்கு 99 வருட காலத்திற்கு மனை இடமும் அளித்துள்ளனர்.

மூந்திரா ஊழல் நாடகங்கள் பலவும் இந்த 'ஏஷியானா' மாளிகையில் நடந்தன என்றும் கூறப்படுகிறது.

**மொரார்ஜி கடிதம்**

காந்திலாலின் இந்தப் போக்கு மாற வேண்டும். இல்லையேல் தகப்பனுடன் உள்ள உறவைத் துண்டித்துக் கொள்ள வேண்டும். இல்லையேல் மொரார்ஜி பதவியிலிருந்து ராஜினாமாச் செய்து விடுவார் என்று 6 பக்கம் நீண்ட கடிதம் ஒன்றை மொரார்ஜி தனயனுக்கு எழுதியதாகக் கூறப்படுகிறது. இதற்கு மகன் ஆறு வரியிலேயே பதிலளித்தாராம். இவ்வாறு ஏதாவது நேர்ந்து விட்டால் தான் தற்கொலை செய்து கொள்வேன் என்றாராம் காந்திலால். இந்த அச்சுறுத்தலுக்கு மொரார்ஜி பணிந்தாராம், அவரது புத்திரவாத்சல்யம் மந்திரி பதவியில் நீடிக்கச் செய்திருக்கிறதாம். தானும் ஒரு கோடீச்வராக வேண்டும் என்பதே காந்திலாலின் லட்சிய மூச்சாம்.

Printed & Published by S. Krishna-
swamy at Janasakthi Press,
32, Broadway, Madras-1.
Editor: P. Jeevanandam.